### (3) THE MADRAS ENTERTAINMENT TAX (AMENDMENT) BILL, 1961 (L.A. BILL NO. 13 OF 1961).

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"That the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 13 of 1961)[a] be taken into consideration."

Rule 50-A of the Madras Entertainments Tax Rules, 1939, empowers any officer of the Commercial Taxes Department not lower in rank than an Assistant Commercial Tax Officer to enter and search at all reasonable times any premises where records such as accounts, tickets used and unused and portions thereof, all stamps or any other articles connected therewith are kept or suspected to be kept by the proprietor in respect of which an offence under the Madras Entertainments Tax Act, 1939, is reasonably suspected to have been committed and to seize and retain as long as necessary all or any of them for the purpose of investigation. The Committee on Subordinate Legislation has recommended the deletion of the rule on the ground that it is beyond the rule making powers of the Government. The powers vested in officers according to the rule referred to are necessary to check evasion of payment of entertainments tax by proprietors of entertainments. It is accordingly proposed to incorporate suitable provisions in that behalf in the Madras Entertainments Tax Act, 1939 itself.

It is considered necessary to give the Commercial Tax Officials the powers of a Collector under the Madras Revenue Recovery Act, 1864 and the Madras City Land Revenue Act, 1851, and of the Commissioners under the Madras Rent and Revenue Sales Tax Act, 1839 for purposes of recovery of amounts due, etc., under the Madras Entertainments Tax Act, 1939. For this purpose, it is proposed to incorporate the provisions in the Madras Entertainments Act of 1939 on the lines of section 29 of the Madras General Sales Tax Act of 1959 (Madras Act I of 1959).

The above Bill seeks to achieve this object. I request the House to accept the motion.

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 13 of 1961) be taken into consideration."

SRI M. KALYANASUNDARAM : அதிகாரிகளுக்கு ஏற்கெனவே கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தை சட்டப்படி கொடுப்பதுதான் இந்தத் திருத்தத்தின் நோக்கம். இதைப் பற்றி அபிப்பிராய வித்தியாசமே இருக்க முடியாது. இந்த வரி போடுவது நியாயம் என்று ஒத்துக் கொண்ட பிறகு வசூலிப்பது முறையாக இருக்க வேண்டும். போட்ட வரி அளவிற்காவது வரி வசூலிக்க வேண்டும். இதை பெரும்பாலும் 90 சத வீதம் வசூலித்து செலவு போக மிச்சம் பஞ்சாயத்திற்கும், முனிசிபாலிடிக்கும் சேரக்கூடியது. ஆகவே இதை வசூல் செய்வதில் கண்காணிப்பு அவசியம் என்று நானும் வற்புறுத்திக்கூற விரும்புகிறேன். ஆனால் வசூலிக்கும் முறையிலுள்ள ஊழல்களை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். சினிமா கொட்டகைக்காரர்கள் பெரும்பாலும் அதிகாரிகள் ஒத்துழைப் போடுகூட டபிள் டிக்கட் வைப்பது போன்ற குற்றம் செய்து வருகிறார்கள்.

[a] Published in the *Fort St. George Gazette*, dated 6th March 1961.

29th March 1961] [Sri M. Kalyanasundaram]

இம்முறை பரவலாக இருக்கிறது என்பது பற்றி என்னிடம் பல புகார்கள் வந்துள்ளன. சில கொட்டகை முதலாளிகள் பெயர்களை வேண்டுமானால் நான் கொடுக்க முடியும். ஆனால் இந்த இடத்தில் நான் அவர்கள் பெயர்களை சொல்ல விரும்பவில்லை. இது பெருமளவிற்கு நடந்து கொண்டிருக்கிறது. அவர்கள் அரசியல் செல்வாக்கை உபயோகப்படுத்திக் கொண்டு அதிகாரிகளை மிரட்டிக் கொண்டு வருகிறார்கள், சில பஸ் ஆபரேட்டர்கள் செய்வதைப் போன்று. அதிகாரிகளுக்கு அதிகாரத்தை கொடுத்து விட்டால் மட்டும் போதாது. அதை சரியானபடி உபயோகப் படுத்தவேண்டும். இதுவரை அதிகாரம் இல்லாததால் அல்ல சரியாக பரிசீலிக்காமல் இருந்தது. எந்த முதலாளியும் டிக்கட்டை காண்பிக்க மாட்டேன் என்றோ அல்லது கொட்டகைக்குள் அல்லது அவர்கள் காரியாலயங்களுக்குள் அதிகாரிகள் நுழையக் கூடாது என்று சொல்லி அதன் பேரில் ஹைகோர்ட்டுக்குப் போய் தடை உத்தரவு வாங்கிக்கொண்டோ வரவில்லை. அப்படியொன்றும் வந்துவிடவில்லை. சபார்டினேட் லெஜிஸ்லேஷன் கமிட்டி இதைக் கவனத்தில் கொண்டு வந்து திருத்த வேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறது. ஆக, முதலாளிகளுக்கு அதிகாரிகள் இடைஞ்சல் செய்யாமல் இருந்ததற்குக் காரணம் அதிகாரிகள் அவர்களோடு ஒத்துழைத்திருந்தார்கள் என்பதற்கு இதே சான்றாகும். அதிகாரிகள் அவர்களை கஷ்டப்படுத்துவதில்லை. ஏழை மக்கள் கொடுக்கக்கூடிய வரியை தான் வாங்க அவர்களை கஷ்டப்படுத்துகிறார்கள். கொட்டகைக்காரர்கள் தாங்களாகவே கொடுத்து விடவில்லை. அதை மக்களிடமிருந்து வசூலித்து விடுகிறார்கள். வசூலிக்கும் முறையில் பல குறைபாடுகள் இருக்கின்றன. இரண்டு டிக்கட்டு வைத்து, விற்ற டிக்கட்டை திரும்பவும் விற்கிறார்கள். அதிகாரிகள் போகும்போது சரியாக கணக்கு காண்பிக்கிறார்கள். நாடகம் நடக்கிறது. லேபர் இன்ஸ்பெக்டர் லேபர் கோர்ட்டுக்கு போய் பார்வையிடுகிற மாதிரி, பாக்டரி இன்ஸ்பெக்டர் பாக்டரியை பார்வையிடுகிற மாதிரி திடீரென்று ஒரு நாள் டி.டி.ஓ. போகலாம். அப்பொழுது எல்லாம் சரியாயிருக்கும். சிலர் வரியை ஏமாற்றுவதை ஒரு கலையாகவே நடத்தி வருகிறார்கள். அதற்கு இடம் அளிக்கக்கூடாது. ஆகவே, கடினமான திருத்தமாக இருந்தாலும், இந்த அதிகாரம் அதிகாரிகளுக்கு வேண்டும். டி.ஆர்.ஓ. கலெக்டர் திடீரென்று சோதனை போட்டு அதிகாரிகள் தவறு செய்தால் அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும் பொறுப்பு இருக்க வேண்டும். கலெக்டருக்கும் அப்பேர்ப்பட்ட ஒரு ரகசிய உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்

* Sri K. SATTANATHA KARAYALAR : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன். எனக்கு முன் பேசிய நண்பர் சுட்டிக்காட்டியதை நானும் சுட்டிக்காட்ட அவாவுறுகிறேன். இன்று சினிமா கொட்டகைகளில், அநேக சினிமாக் கொட்டகை முதலாளிகள் கணிசமான அளவு டாக்ஸ் இவேஷன் செய்கிறார்கள். டிக்கட்டை ரீ-சேல் செய்வதின் மூலமும், இதர முறைகளையும் கையாள்கிறார்கள். கொட்டகை சொந்தக்காரர்கள் மத்தியிலே ஒரு பாஷை உண்டு. அன்று கிடைத்த கலெக்ஷனில், மொத்தக் கலெக்ஷன் என்ன, காஷ் கலெக்ஷன் என்ன, கேட் கலெக்ஷன் என்ன என்று கேட்பார்கள். ஜீ. வி. என்பார்கள். ஜீ. வி. என்றால் கேட் கலெக்ஷன். கேட் கலெக்ஷன் என்றால்கொட்டகைக்கு முன் வந்து நின்று டிக்கெட் கொடாமல் வாங்குவது. கொஞ்ச காலத்திற்கு முன்பு நானும் ஒரு கொட்டகையை கண்காணித்துக் கொண்டிருந்தேன். ஆகவே இது பற்றி எனக்குத் தெரியும். இந்த கேட் கலெக்ஷன் டிஸ்ட்ரிப்யூட்டருக்கும் வராது. சர்க்காருக்கு அந்த வரிப் பணமும் கொடுக்கப்படுவதில்லை. இப்படி பெரும் தொகைகளை ஏமாற்றுவதற்கு கேட் கலெக்ஷன் என்று ஒரு முறையை வைத்திருக்கிறார்கள். கிராமாந்திரங்களில், மொத்தம் வசூல் கிடைத்திருப்பது 100 ரூபாய் என்றால். கணக்கு காண்பிப்பது 50 ரூபாய்க்குத்தான் இருக்கும். ஆக இப்படி கணிசமான ஒரு தொகையை கேட்டிலேயே வைத்து வாங்கி விடுகிறார்கள். டிக்கட்டைக் கூட திரும்ப விற்பதில்லை. கையிலேயே காஷ் வாங்கிக் கொள்கிறார்கள், கொட்டகைக்குள் ஆள் எண்ணிக்கையைப் பார்த்தால் அதிகமாயிருக்

கும். ஆனால் கலெக்ஷனைப் பார்த்தால் குறைவாயிகும். ஏன் இப்படியிருக்கிறதென்று கேட்டால், "காம்ப்ளிமெண்டரி டிக்கட்ஸ் இஷ்யூ செய்திருக்கிறோம், அவர்கள் வந்திருக்கிறார்கள் என்று சொல்வார்கள். ஆகவே, இந்த காம்ப்ளிமெண்டரி டிக்கட்ஸ் கொடுக்கும் பழக்கத்தை அடியோடு நிறுத்த வேண்டும். இதனால் கொட்டகைக்காரருக்கும் கஷ்டம், அதோடு தப்பித்துக் கொள்ளவும் இது ஒரு மார்க்கமாக இருக்கிறது. கிராமங்களில் இது பெருமளவில் நடந்து கொண்டிருக்கின்றன. நகரங்களில்கூட இப்படி நடக்கிறது. இதைக் கண்டிக்கக்கூடிய நோக்கத்தோடு, ரூல்ஸ் அல்லது இன்ஸ்ட்ரக்ஷன்ஸ் கொடுக்கும் போது கேட் கலெக்ஷன் கலெக்ட் செய்வது, காம்ப்ளிமெண்டரி டிக்கட்ஸ் கொடுப்பது இவைகளுக்கு சந்தர்ப்பமே கொடுக்கக்கூடாது. ஊரில் பெரிய மனிதர் என்று சொல்லி ஒரு சிலருக்கு வழங்குவது காரணமாக அதை வைத்துக்கொண்டு பெரும் பகுதி சீர்வையிலிருந்து தப்ப வாய்ப்பிருக்கிறது. வெளியிலேயே பணத்தை வாங்கிக் கொண்டு உள்ளே விட்டு •அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு "டாக்ஸ் இவேட்" செய்யக்கூடிய ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுக்கக்கூடாது. சாதாரணமாக சென்னையில் இருக்கின்ற சினிமாக் கொட்டகைகளில்கூட இந்த நிகழ்ச்சிகளை நம்மால் பார்க்க முடிகிறது. இந்தச் சபையிலுள்ள அங்கத்தினர்கள் பலருக்கு இந்த அனுபவம் ஏற்பட்டிருக்கும் என்று நம்புகிறேன். சினிமா புதிதாக ஆரம்பித்தால் சில தினங்களுக்கு டிக்கட்டே கிடைப்பதில்லை. (குறுக்கீடு) ரயில்வே ரிஸர்வேஷன் இருப்பது போல் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். இந்த நிலைமையில்தான் டிக்கட் விற்பனை நடந்துகொண்டிருக்கிறது. இரண்டு ரூபாய் டிககட்டுக்கு மூன்று ரூபாய் கொடுத்தால் தரலாம் என்று சொல்லி சிலர் விற்கிறார்கள். இதில் கொட்டகை மானேஜ்மேண்டுக்கும் பொறுப்பு இருப்பதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். சென்னையைப் பொறுத்தவரை இது சர்வசாதாரணமாக நடந்துகொண்டிருக்கிறது. இவைகளை கண்காணிக்க வேண்டும். அதேபோன்றுதான் அக்காமடேஷனுக்குக் கூடுதலாக டிக்கட் கொடுக்கும்போது அதற்காக எக்ஸ்ட்ராவாக நாற்காலிகளைப் போடுகிறார்கள். இதையெல்லாம் கண்காணிப்பதற்குச் சில வழிவகைகள் செய்யவேண்டும். அதோடு சம்பந்தப்பட்ட உத்தியோகஸ்தர்கள் அடிக்கடி முன்அறிவிப்பு இன்றிபோய் கண்காணிக்கவேண்டும் என்பதையும் சுட்டிக் காட்டி என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

*SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இங்கு கொண்டு வந்திருக்கக்கூடிய மசோதாவைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இங்கு சொல்லப்பட்ட பல தவறுகள் பல இடங்களிலும் நடந்துகொண்டிருக்கின்றன. எங்கள் பக்கத்தில் ஒன்றிரண்டு நாட்கள் டெபுடி கலெக்டர் திடீரென்று போய் பார்த்தார்கள். அப்போது பலவிதமான தவறுகள் இருந்தன என்று கண்டு பிடித்து, அதற்காக இரண்டு வாரம் ஸஸ்பெண்ட் செய்தார்கள். இம்மாதிரி பல தடவைகளில் 500 ரூபாய், 1,000 ரூபாய் என்று ஃபைன்-னும் போட்டிருக்கிறார்கள். இவ்விதம் அடிக்கடிப் போய்ப் பார்க்க வேண்டும் என்பது என் கருத்து. இம்மாதிரிப்பட்ட தவறுகள் அதிகமாகவும் கிராமங்களிலுள்ள டூரிங் சினிமாக் கொட்டகைகளில் தான் நடக்கின்றன. இதைப் பற்றி பல அதிகாரிகளிடத்திலும் பல முறை சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இதில் பல நண்பர்கள் சொல்வது போல் அதிகாரிகளும் இதில் உடந்தையாக இருக்கிறார்கள் என்று தெரிய வருகிறது. ஆகவே சினிமா கொட்டகை முதலாளிகளை மட்டும் குறை சொல்லிக்கொண்டிருப்பதில் பிரயோசனம் இல்லை. அதிகாரிகளும் உளவாளிகள் என்ற முறையில் இருப்பதனால்தான், இந்தத் தவறு நடக்கிறது. சினிமாக் கொட்டகைகளை யாராவது வந்து பரிசோதனை செய்யும்படிச் சொன்னால் அதை அவர்களுக்கு முன் கூட்டியே அறிவித்து விட்டு பின்னால் செக் பண்ணப் போகிறார்கள். இதையெல்லாம் சர்க்கார் நல்ல விதத்தில் கண்காணிக்க வேண்டும். ஏனென்றால் ஏழைகளிடத்தில் கேளிக்கை வரி, அல்லது தமாஷா வரி என்று வாங்கி விட்டு அதை சர்க்

29th March 1961] [Sri M. R. Kandaswami Mudaliyar]

காருக்கு சரியாகக் கொடுப்பதில்லை என்கின்ற புகார் இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே, இதில் எந்த முறையை கையாண்டால் நியாயமாக வரிகளை எல்லாம் வசூல் செய்ய முடியுமோ அதற்கான நடவடிக்கைளை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

*SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் இந்த திருத்தத்தை வரவேற்று சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சினிமா லைசென்ஸ் கொடுக்கும் விஷயத்தில் மிக காலதாமதம் ஆகிறது. சுமார் ஆறு மாதம் ஒரு வருடம் என்று காலதாமதம் ஆகிறது. இதன் காரணமாக பஞ்சாயத்து போர்டுக்கு வருமானம் குறைந்துவிடுகிறது. சினிமாக்கள் வந்ததினால் பஞ்சாயத்துகளின் வருமானம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் இதில் பல லீக்கேஜ் (Leakage) விஷயங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. இதில் உத்தியோகஸ்தர்களும் உடந்தையாக இருப்பதாக நானும் கேள்விப் படுகிறேன். லைசென்ஸ் கொடுக்கும்போதே காம்ப்ளிமெண்டரி டிக்கட் கொடுத்து விடுகிறார்கள். டிஸ்டிரிப்யூடர்களுக்கும் இதில் பங்கு உண்டு என்று நினைக்கிறேன். அவர்கள் இதில் ஏஜெண்டுகளாக இருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் எப்படியிருந்த போதிலும் இதில் சம்மந்தப்பட்ட ஆபீசர்கள் திடீரென்று போய் டிக்கட்டு இன்ஸ்பெக்ஷன் நடத்த வேண்டும். அதற்குத் தகுந்தபடி அதிக உத்தியோகஸ்தர்கள் போட வேண்டும். அப்போதுதான் நல்ல முறையில் கண்காணிப்பு இருக்க முடியும். ஆனால் இதன் காரணமாக தொந்திரவு (Harassment) இருக்கக்கூடா தென்பதையும் தெரிவித்துக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

THE. HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்போது சினிமா அடைந்திருக்கின்ற வளர்ச்சிக்குத் தகுந்தவாறு என்டர்டெயின்மெண்டு டாக்ஸ் அதிகமாகக் கிடைக்கவில்லை என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். இதைப் பற்றி என் இலாகாவுக்கே, மற்ற இனங்களில் எல்லாம் வருமானம் அதிகரித்து இருக்கும்போது, இதில் மட்டும் ஏன் வருமானம் அதிகமாக வரவில்லை, அதற்குக் காரணம் என்னவென்று கேட்டிருக்கிறேன். இதில் கஷ்டம் என்னவென்று சொன்னால் கிராமங்களில் நடக்கின்ற டூரிங் சினிமாக்களில் தான் அதிகமாக லீக்கேஜ் ஏற்படுகிறது. அதைக் கண்காணிப்பது கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கிறது. டூரிங் சினிமாக்களில் என்டர்டெயின்மெண்ட் டாக்ஸ் வசூலிப்பதில் பல பிரச்னைகள் வருகின்றன. ஆகவே இதைப் பற்றி நல்ல முறையில் கண்காணிப்பதற்கு, திடீரென்று ஒரு ஜில்லாவில் போய் இன்ஸ்பெக்ஷன் நடத்தவேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறேன். அந்த ஜில்லாவின் பெயர் என்ன என்பதை இப்போது என்னால் சொல்ல முடியாது. ஒரு ஜில்லா என்று சொல்லியிருப்பதால் எல்லா ஜில்லாக்களிலுள்ளவர்களும் கவனமாய் இருப்பார்கள் என்று நம்புகிறேன். இந்த முறையில் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொண்டு தான் இருக்கிறது. இனிமேல் இந்த முறையில் வருகின்ற வரிகள் எல்லாம் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு போக வேண்டியிருப்பதால், ஸ்தல ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களுக்கும் இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு அதிகாரம் கொடுக்கலாமா என்பதைப் பற்றி சர்க்கார் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறது. சேர்மனோ அல்லது பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டோ இவர்கள் வந்து இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு அதிகாரம் கொடுக்கலாமா என்பதைப் பற்றி தான் அரசாங்கம் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. இதைப் பற்றி இது வரையிலும் திட்டவட்டமான முடிவு எடுக்கப்படவில்லை. சர்க்கார் பரிசீலனை செய்து சீக்கிரமாக இதன் பேரில் ஒரு முடிவு எடுக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, டிக்கட்டுகள் பிளாக் மார்க்கெட்டில் விற்பது சம்பந்தமாக பல நண்பர்கள் இங்கே சொன்னார்கள். சட்டபூர்வமாக இதை எப்படி தடுப்பது என்பது தெரியவில்லை. தடுப்பதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. சினிமா வெளியான முதல் நாளன்றே பார்க்கவேண்டும்

என்று நினைக்காமல் இருந்து விட்டால் இதைச் சுலபமாகத்தடுத்து விடலாம். இருந்தாலும் சர்க்கார் இந்த விஷயத்திலும் கவனம் செலுத்தும் என்பதை தெரிவித்து, இந்த திருத்த மசோதாவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 13 of 1961) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 and 3 were put and carried.

Clause 1 and the preamble were put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, I move—

"That the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 13 of 1961) be passed."

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 13 of 1961) be passed."

The motion was put and carried and the Bill was passed.

(4) THE LAND ACQUISITION (MADRAS AMENDMENT) BILL, 1961 (L.A. BILL NO. 11 OF 1961).

* THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move—

"That the Land Acquisition (Madras Amendment) Bill, 1961 (L.A. Bill No. 11 of 1961) be taken into consideration[a]."

Under the Land Acquisition Act, 1894, compensation for the lands acquired is payable as laid down in section 23 of the Act. Section 24 of the Act lays down the conditions which shall be ignored while arriving at the valuation of the lands. The market value as on the date of publication of the Draft 4 (1) notification, compensation for damages, other reasonable charges for any shift of residence or place of business and in addition a solatium of 15 per cent of the total market value have to be awarded as compensation for the land acquired. In recent times there have been large increases in the market value of the lands in urban areas, including rise in values due to speculative transactions. The consequence has been payment of heavy amounts as compensation to private landholders by Government for acquisition of lands for the very necessary and essential schemes of housing. Naturally, such large payments from the public exchequer to private individuals has limited the quantum of housing schemes that could be taken up by Government. Therefore, it has become necessary to modify and lay down suitable principles for payment of reasonable compensation for lands acquired for housing schemes.

10 a.m. The Government of India raised the question of freezing the value of lands acquired for housing schemes first in 1957. The Housing Ministers' Conference held in 1957 recommended that the State Governments should pass enabling legislation for acquisition

[a] Published in the *Fort St. George Gazette*, dated 23rd February 1961.